22nd March 1961]

**THE HON. SRI C. SUBRAMANIAM**: அதற்கு ஆதாரம் கிடையாது ; இந்த விஷயத்தில் சர்க்கார் ஒரு முடிவு எடுப்பதற்கு முன்பு மற்ற விவரங்களைச் சொல்ல முடியாது.

*Hindi in Teachers' Training Schools*

* 991 *Q.*—**SRI A. VEDARATHNAM**: கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகளில் இப்போது ஹிந்தி போதனை நிறுத்தப்பட்டிருக்கிறதா ?

(இ) அப்படியானால், இதன்மூலம் வேலை இழந்த ஆசிரியர்கள் எத்தனை பேர் ?

(உ) இப்படி வேலை இழந்த ஹிந்தி பண்டிதர்களுக்கு அரசாங்கம் வேறு என்ன வாய்ப்பளித்திருக்கிறது ?

**THE HON. SRI C. SUBRAMANIAM**:

(அ) Yes, Sir.

(இ) Eighteen, Sir.

(உ) No steps were taken to provide these pandits with alternative appointments as such of those as were qualified could secure employment in the high schools which were opened in 1960–61. The appointment of unqualified teachers was purely on a temporary basis and no steps were necessary to retain them in service.

**SRI A. VEDARATHNAM**: தகுதி பெற்ற ஹிந்தி பண்டிதர்கள் எல்லோரையும் ஹைஸ்கூல்களில் அப்ஸார்ப் செய்யப்பட்டுவிட்டதா ? ஹிந்தி பண்டிதர்கள் இல்லாத இடங்களுக்கு அவர்களை நியமிக்க அரசாங்கம் முன் வருமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM**: இது சர்க்கார் பள்ளிகளில் இல்லை ; தனிப்பட்ட பள்ளிகளில் அவசியம் இருக்கும் இடங்களில் இந்த பண்டிதர்கள் நியமிக்கப்படுவார்கள்.

**SRI P. S. K. LAKSHMIPATHI RAJ**: ஒரு சில பள்ளிகளிலே ஆசிரியர்களே ஹிந்தி வகுப்புக்குப் போகும் மாணவர்களை வகுப்புக்குப் போகாமல் வெளியே போய்விடுங்கள் என்று சொல்வது சர்க்காருக்குத் தெரியுமா ? அதைத் தடுக்க ஏதாவது நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM**: அதுமாதிரி தகவல் இல்லை ; அங்கத்தினருக்குக் கிடைத்தால் அதை எனக்குத் தனியாக எழுதி அனுப்பக் கோருகிறேன்.

*Wage Board for beedi workers*

* 992 *Q.*—**SRI V. K. KOTHANDARAMAN**: கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பீடித் தொழிலாளர்களுக்கு சம்பள நிர்ணய போர்டு அமைக்க உத்தேசமுண்டா ?

(இ) இது விஷயமாக நமது சர்க்கார் மத்திய சர்க்காருக்கு என்ன ஆலோசனை கூறியுள்ளார்கள் ?

**THE HON. SRI R. VENKATARAMAN**: (அ) பீடித் தொழிலாளர்களுக்கு சம்பள நிர்ணய போர்டு அமைக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் இல்லை.